Regd. No. M.7897 NAVAMANI (Tamil Daily) MADRAS Phone No. 76199

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல் தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

ஆசிரியர்: சோலை

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த்தினசரி



மலர் 16 இதழ் 267 ★ சென்னை 10—6—76 வியாழன் ★ வெளியூர் 11—6—76 வெள்ளி ★ 4 பக்கம் 25 காசு

## பிரிட்டனில் இனவெறி தாக்குதல்: இளைஞர் சம்மேளனம் கண்டனம்

சென்னை, ஜூன் 10—பிரிட்டனில் இனவெறி பிடித்த வெள்ளைக்காரர்களால் ஆசிய, அராபிய மாணவர்கள் படுகொலை செய்யப்பட்டதற்கு இந்திய இளைஞர் சம்மேளனமும், மாணவர் சம்மேளனமும் கண்டனம் தெரிவித்திருக்கிறது.

இது சம்பந்தமாக பிரிட்டிஷ் பிரதமருக்கு அகில இந்திய இளைஞர் சம்மேளன தமிழ் நாடு கவுன்சில் செயலாளர் டி. ராஜாவும் அகில இந்திய மாணவர் சம்மேளன தமிழ் நாடு கவுன்சில் செயலாளர் டி. ஜி. வெங்கடாசலமும் கண்டனக் கடிதம் அனுப்பியுள்ளனர்.

சென்னையில் உள்ள பிரிட்டிஷ் துணைக் கமிஷனர் மூலம் இந்தக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது.

இந்திய மாணவர் ஒருவரும் ஜோர்டான் நாட்டு மாணவர் ஒருவரும் வெள்ளை ஏகாதிபத்திய நிறவெறியர்களால் படுகொலை செய்யப்பட்டதானது வெட்கப்படக்கூடிய சம்பவமாகும் என்றும் ஆசிய, அராபிய நாட்டினருக்கு எதிராக நடத்தப்பட்ட இந்த கொடுமையை மாணவர், இளைஞர் சம்மேளனங்கள் மிகக் கடுமையாகக் கண்டிப்பதாகவும் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆசிய—அரபு நாட்டுக்காரர்களான சிறுபான்மையோருக்குத் தகுந்த பாதுகாப்புத்தர பிரிட்டிஷ் அரசு தவறிவிட்டது என்றும் இது கண்டிக்கத்தக்கதாகும் என்றும் கடிதத்தில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

தாகூரின் படைப்பு சாதனை:

## சோவியத் நாட்டில் புத்தகம் வெளியீடு

யெரவான், ஜூன் 10—இந்திய மாகவிஞர் தாகூரின் படைப்பு சாதனை பற்றி சோவியத் நாட்டில் புத்தகம் ஒன்று வெளியிடப்பட்டிருக்கிறது.

தாகூரின் பிறைநிலா என்ற கவிதை தொகுப்பு ஆர்மீனிய குடியரசில் முதல்முதலாக 60 ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பட்டது.

இதை கொண்டாடும் வகையில் இந்த தாகூரின் படைப்பு சாதனை பற்றிய புத்தகம் இப்போது வெளியிடப்பட்டிருக்கிறது. இந்த புத்தகத்தின் ஆசிரியர் மெரி மாக்சா பெப்யான் ஆகும்.

ஆர்மீனியக் குடியரசில் 1913-ம் ஆண்டே தாகூரின் கவிதைகள் மொழி பெயர்க்கப்பட்டது குறிப்பிடத் தக்கது.

சென்னையிலும் கல்கத்தாவிலும்தான் ஆர்மீனிய வாணிகர்கள் இருக்கின்றார்கள்.

சென்னையில் ஆர்மீனிய சாலையொன்று இருப்பது நினைவிருக்கலாம்.

சோவியத் நாட்டில் உள்ள நூலகத்தில் மிகப் பழைய தமிழ் நூல்கள் கூட இருக்கின்றன. 1850ம் ஆண்டுக்கு பிறகு வெளியிடப்பட்ட சில அபூர்வ தமிழ் புத்தகங்கள் கூட ஆர்மீனிய நூலகத்தில் இருக்கின்றன.

ரத்னகிரி கோவிலுக்கு

## தனி அதிகாரி நியமனம்

திருச்சி, ஜூன் 10—ரத்தினகிரி பாலமுருகன் கோவில் நிர்வாகத்தைக் கவனிக்க அரசாங்கம் தனி அதிகாரியை நியமித்துள்ளது.

ராணிப்பேட்டை ரெவினியூ அதிகாரி ஆர். ரத்தினசாமி ரத்தினகிரி கோவில் தனி அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## என்.ஜி.ஓ. மாநாடு பக்தவத்சலம் துவக்கி வைக்கிறார்

சென்னை, ஜூன் 10—தமிழ் நாடு வேளாண்மை கிடங்குப் பணியாளர்கள் மாநாடு சென்னையில் நடைபெறவிருக்கிறது.

இம்மாதம் 13ம் தேதி சென்னை மத்திய நூலகக் கட்டிடத்தில் நடைபெறவிருக்கும் இம்மாநாட்டை முன்னாள் தமிழக முதல்வர் எம். பக்தவத்சலம் துவக்கிவைக்கிறார். சிவ. இளங்கோ இம் மாநாட்டுக்குத் தலைமை தாங்குவார்.

தற்போது சோவியத் நாட்டில் இருக்கும் பிரதமர் இந்திராவை சோவியத் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பிரஷ்னேவ் வரவேற்கும் காட்சி.

## கடத்தல் மன்னன் யாசின்: பிடித்துக் கொடுத்தால் . . .

# ரூ 5 ஆயிரம் ரொக்க பரிசு

## மத்திய அதிகாரி மீண்டும் அறிவிப்பு

சென்னை, ஜூன் 10—தமிழகத்தைச் சேர்ந்த கடத்தல் மன்னன் யாசினை பிடித்துக் கொடுத்தால் ரூ 5 ஆயிரம் பரிசு அளிக்கப்படும் என்று மத்திய எக்சைஸ் துணை கலெக்டர் ராவ் மீண்டும் அறிவித்துள்ளார்.

1964ம் ஆண்டில் இருந்து கடத்தல் மன்னன் யாசின் தலைமறைவாக இருப்பது தெரிந்ததே.

இவர் வெளிநாட்டுக்கு தப்பி சென்றிருக்கக்கூடும் என்று சந்தேகம் பரவலாக எழுந்திருக்கிறது.

தமிழகத்தைச் சேர்ந்த 10 கடத்தல் மன்னர்கள் இன்னமும் சட்டத்தின் பிடியில் அகப்படாமல் தலைமறைவாக இருக்கின்றனர்.

இவர்களை பிடித்துக் கொடுத்தால் ரூ. 5 ஆயிரம் பரிசு கொடுக்கப்படும் என்று முன்னமே அறிவிக்கப்பட்டிருந்தது.

### மீண்டும் அறிவிப்பு

இது சம்பந்தமாக மத்திய எக்சைஸ் துணை கலெக்டர் ராவ் இன்று நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

தலைமறைவாக இருக்கும் கடத்தல் புள்ளிகளின் பட்டியல் விவரம் வருமாறு:

1. அப்துல் காதர் என்னும் தைக்காவாப்பா. இவர் ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த கீழக்கரையைச் சேர்ந்தவர்.

இவருக்குக் கீழக்கரையிலும் சென்னையிலும் வீடுகள் இருக்கின்றன.

ஹாங்காங்கில் இருக்கும் வியாபார நிறுவனமொன்றில் இவர் பாகஸ்தராகவும் இருக்கிறார்.

2. அகமது யாசின் என்னும் யாசின். இவரது தந்தை பெயர் ஷேக்கத்துல்லா. இவருக்கு சென்னையில் பல வீடுகள் இருப்பதாக சொல்லப்படுகிறது.

பல தொழில் நிறுவனங்களில் இவர் பங்குதாரராக இருப்பதாக சொல்லப்படுவது நினைவிருக்கலாம்.

அரசாங்க காண்டிராக்டுகள் பலவற்றை இவர் எடுத்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

இவர் பல பிரபலஸ்தர்களுடன் தொடர்புகொண்டிருந்தவர் என்று கூறப்படுகிறது.

3. பி. எஸ். ஏ. ரகிமான். இவருக்கு சென்னையில் வீடு இருக்கிறது.

4 சென்னை நாராயண முதலி தெருவில் 93 எண் வீட்டில் வசித்த ஹரிகிருஷ்ணன் என்னும் ஹரிகிஷன் மத்திய சுங்க அதிகாரிகளால் தேடப்பட்டு வருகிறார்.

சென்னை பீமண்ண தெருவில் வசித்த சங்கர்லால், காதபாட வீதியில் இருந்த சி. வி. பாஷா, சென்னையை சேர்ந்த இக்பால், லட்சுமண ராவ் ஆகியோர்களையும் போலீசார் தேடி வருகின்றனர்.

கடலூர் நகரைச் சேர்ந்த

1-ம் பத்தி பார்க்க

5-ம் பத்தி தொடர்ச்சி

முகமது காசால், கோவையை சேர்ந்த புகராஜ் மனஜலால் ஆகியோர்களும் தேடப்பட்டு வருகிறார்கள்.

இவர்களைப் பிடித்துக் கொடுத்தால் ரூ. 5000 பரிசு கொடுக்கப்படும் என்று மத்திய சுங்க அதிகாரி இன்று மீண்டும் அறிவித்தார்.

இதற்கு முன்னர் கடத்தல் புள்ளியொருவரை பிடித்துக் கொடுத்தவருக்கு ரூ 5000 பரிசு வழங்கப்பட்டிருக்கிறது. இதற்காக 3 நாள் பம்பாய் நகரில் தங்கி கடத்தல் புள்ளியொருவரை பிடித்து கொடுத்தவருக்கு இவ்வாறு பரிசு வழங்கப்பட்டிருக்கிறது.

கடத்தல் வலையில் ஈடுபட்ட இரண்டு பெண்கள் கடத்தல் தடுப்பு சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

சென்னையை சேர்ந்த கீதா, கரூர் நகரைச் சேர்ந்த காளியம்மாள் ஆகியோர் இந்த சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு ஏற்கனவே சிறையில் இருக்கின்றார்கள்.

## பல கோடி வரி ஏய்ப்பு: அதிகாரி வெளியிட்ட திடுக்கிடும் தகவல்

சென்னை, ஜூன் 10—எக்சைஸ் தீர்வை வரி ஏய்ப்பில் பல கோடி ரூபாய்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதுபற்றிய விவரங்களை எக்சைஸ் கலெக்டர் ஐ. ஜே. ராவ் நிருபர்களிடம் தெரிவித்தார்,

மத்திய எக்சைஸ் வரி ஏய்ப்பைக் கண்டு பிடிக்க 3 உதவிக் கலெக்டர்கள் தலைமையில் புதிய பிரிவுகள் அமைக்கப்பட்டு பல சோதனைகள் நடத்தப்பட்டுள்ளதாக மத்திய எக்சைஸ் கலெக்டர் ஐ. ஜே. ராவ் தெரிவித்தார்.

தமிழகத்தில் பெருமளவுக்கு எக்சைஸ் வரி ஏய்ப்பு தடுக்கப்பட்டுள்ளது. ஆனாலும் சில பொருட்களில் வரி ஏய்ப்பு இருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

நிருபர்களிடம் பேசுகையில் ராவ் கூறியதாவது:

தீர்வைக்குட்பட்ட 100 பொருட்களில் 5—6 பொருட்களில் வரி ஏய்ப்பு அதிகம் இருக்கிறது. புகையிலை, இரும்பு சாமான் தயாரிப்பு, உணவுப பண்டங்கள் தயாரிப்பு, அலுமினியம் பொருள் தயாரிப்பு போன்றவற்றில் இந்த வரி ஏய்ப்பு இருக்கிறது

இந்த வரி ஏய்ப்பைக் கண்டு பிடிக்க 3 புதிய பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

புகையிலையில் வரி ஏய்ப்பு அதிகமாக இருக்கிறது. இந்த வரி ஏய்ப்பு இப்போது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. லட்சம் கிலோ புகையிலைக்கு 24 லட்ச ரூபாய் எக்சைஸ் வரி ஏய்ப்பு கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

கோவை, சேலம், ஈரோடு பகுதியில் இந்த வரி ஏய்ப்புகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

புகையிலையில் இருந்து மூக்கு பொடி தயாரிப்பிலும் வரி ஏய்ப்பு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஒரு மூக்குப்பொடி தயாரிப்பாளர் 23 ஆயிரம் ரூபாய் தீர்வை ஏய்ப்பு செய்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

ஸ்டீல் நாற்காலிகள் போன்றவற்றின் விற்பனையில் இந்த தீர்வை ஏமாற்று வேலை நடந்துள்ளது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

சினிமாக் கொட்டகைகளுக்கு வரும் ஸ்டீல் நாற்காலிகள் இப்படி ஏய்க்கப்படுகின்றன.

சென்னை நகரில் ஒரு குரூப் தியேட்டரில் உள்ள ஒரு தியேட்டர் இந்த ஏய்ப்பை செய்துள்ளது கண்டுபிடிக்கப்பட்டது. சுமார் 20 ஆயிரம் ரூபாய் இந்த வகையில் கண்டு பிடிக்கப்பட்டது.

மின் விசிறி, பெயிண்ட் போன்றவைகளிலும் தீர்வை ஏய்ப்பு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது,

இந்த ஆண்டு ஜனவரி முதல் இதுவரை 107 லட்ச ரூபாய் மதிப்புள்ள தங்கம், நகைகள் கைப்பற்றப்பட்டுள்ளன.

தங்கவியாபாரிகள் பான் புரோக்கர், நகை செய்கிறவர்கள் ஆகியவர்களிடம் இருந்து இந்த தங்கம் பறிமுதல் செய்யப்பட்டுள்ளது.

கடந்த ஆண்டில் ரூ. 39 லட்சம்தான் கைப்பற்றப்பட்டது.

போவிரண்ட் ரோல் பற்றி மதுரை அதிகாரிகளுக்கு எச்சரிக்கை தரப்பட்டுள்ளது. இதுபோன்ற சம்பவங்களுக்காக கோவையில் இவர் கைதாகி இருக்கிறார்கள்.

இந்த ஆண்டு இதுவரை 457 சோதனைகளை அதிகாரிகள் நடத்தி இருக்கிறார்கள். கடந்த ஆண்டில் 858 சோதனை நடந்தது.

இந்த ஆண்டு 300 கோடி ரூபாய்க்கு மேல் எக்சைஸ் தீர்வை மூலம் கிடைக்கும் என்றும் அவர் தெரிவித்தார்.

## அவசரக் கூட்டம்: எம். ஜி. ஆர். அறிவிப்பு

சென்னை, ஜூன் 10—அண்ணா தி. மு. க.வின் மாவட்ட அமைப்பாளர்கள், தலைமை நிலைய செயலாளர்களின் கூட்டத்தை அண்ணா தி. மு. க. பொதுச் செயலாளர் கூட்டியுள்ளார்

இந்தக் கூட்டம் இம் மாதம் 18-ம் தேதி தலைமை நிலையக் கட்டிடத்தில் நடக்கும் என்று அவர் அறிவித்துள்ளார்,

இந்தக் கூட்டத்தில் அண்ணா தி. மு. க. அறிவித்துள்ள பாத யாத்திரை பற்றி விவாதிக்கப்படும்.

பாத யாத்திரைக்கான திட்டங்கள்—விதிமுறைகள் இந்தக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டு தீர்மானிக்கப்படும்.

யார் யார் எந்த எந்த ஊரில் பாதயாத்திரையில் கலந்து கொள்வது என்பது பற்றி இந்தக் கூட்டத்தில் முடிவு எடுக்கப்படும்.

## சென்னையில் ரெயில்வே அமைச்சர்

சென்னை ஜூன் 10—மத்திய ரெயில்வே அமைச்சர் கமலபதி திரிபாதி சென்னை வந்துள்ளார்.

இன்று தென்பிராந்திய ரெயில்வே தலைமை அலுவலகத்தை அவர் பார்வையிடுகிறார். ஜெனரல் மானேஜர் கவுரிசங்கர் மற்றும் பல இலாக்காக்களின் தலைமை அதிகாரிகளுடன் முக்கிய பிரச்னைகள் குறித்து விவாதிக்கிறார். நாளைவெள்ளிக்கிழமை அமைச்சர் கமலபதி ரெயில் பெட்டி தொழிற்சாலையைப் பார்வையிடுவார்.

இவ்வாறு தென் பிராந்திய ரெயில்வே பத்திரிகைக் குறிப்பொன்றில் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## தனியார் ரேஷன் கடைகள்: அரசே ஏற்று நடத்தும்

சென்னை, ஜூன் 10—கோவை நகரத்திலும் அதன் சுற்றுப்புறத்திலும் உள்ள எல்லா தனியார் ரேஷன் கடைகளையும் அரசே ஏற்று நடத்தும் என்று தெரிகிறது.

இந்த தகவலை நேற்று சென்னையில் அரசு அதிகாரியொருவர் வெளியிட்டார்,

அவர் கூறியதாவது:—

தனியார் ரேஷன் கடைகளுக்கு பதிலாக கூட்டுறவு சங்க அங்காடிகளும். சிவில் சப்ளை கார்பரேஷன் சார்பில் ரேஷன் கடைகளும் ஏற்படுத்தப்படும்.

ரேஷன் கடைகளில் ஜன நெரிசலை தவிர்ப்பதற்காக அதிகமான கூட்டுறவு பண்டகசாலைகளை ஆங்காங்கே அரசு ஏற்படுத்தும்.

தற்போது கோவையில் 96 தனியார் ரேஷன் கடைகள் இருக்கின்றன.

# சூட்சமம் புரிந்தது!

**லட்சுமிபிரியா**

ஏதோ எழுதிக் கொண்டிருந்தார் கோபாலபுர கோப்பெருஞ் சோழன்.

உடன் பிறப்புக்களுக்கு உயிர் ஊட்ட மடல் தீட்டுகின்றார்போலும் என்று ஓசைப்படாமல் அவர் பின்புறம் வந்து நின்றேன்.

'போட்டோ ஜெனிக்' தலை டாலடித்தது என் கைகள் துருதுருத்தன. மழமழப்பான அந்த தலையில் தாளம் போட்டால் என்ன என்று எனக்குத் தோன்றியது.

என்ன எழுதுகிறார் என்று அவர் தோள் பக்கமாக எட்டிப் பார்த்தேன்.

அது ஒரு கணக்கு நோட்டு.

'அருப்புக்கோட்டை அப்புசாமி 4000 ரூபாய் சின்னாளப்பட்டி, ராமசாமி 3000 ரூபாய்' என்று ஆடிட்டர் கலைஞர் எழுதிக் கொண்டிருந்தார்.

'ஹீம்' என்று தொண்டையை இலேசாக கனைத்துக் கொண்டேன்.

தூக்கி வாரிப் போட்டது அவருக்கு. திரும்பிப் பார்த்தார் கல்லா பெட்டி கொண்டான.

என்னைக் கண்டதும் சமாளித்துக் கொண்டார்.

உடனே எழுந்து ஓடோடி வந்தார் 'வந்தாயா உடன் பிறப்பே! பிசிராந்தையே! என்னிடம் இருந்து உன்னை யாரால் பிரிக்க முடியும்? என்று கூறிக் கொண்டே என்னை கட்டித் தழுவிக்கொண்டார்.

எனக்கு மூச்சு திணறியது. 'மன்னிக்க வேண்டும். என் தாய்க்கு நான் ஒரே பிள்ளை' என்று திக்கித் திணறி பேசினேன்.

அவர் விடவில்லை.

'அதனாலென்ன உடன் பிறப்பே! வான் மழை நிலத்தைத் தழுவ 'புல்லியது' போல நாம் இரண்டறக் கலந்துவிட்டோம். இதற்கு பிறப்பு ஒரு தடையாகுமா? என்று வஜனம் பேசினார் கள்ளுக்குடி கொண்டான்.

'ஏதேது, அசிங்கமான மனிதராக இருப்பார் போலிருக்கிறதே' என்று நினைத்துக்கொண்டே அவர் கோரப் பிடியில் இருந்து விலகிக்கொண்டேன்.'

'எனக்கு ஒரு சந்தேகம்' என்றேன்.

'கேள். உடன்பிறப்பே கேள்!' என்று சொல்லிக் கொண்டே சுகமாக சோபாவில் சாய்ந்துகொண்டார் கோபாலபுர கோப்பெருஞ்சோழன்.

'கணக்குப் புஸ்தகத்தில் ஏதோ எழுதிக்கொண்டிருந்தீர்கள். நான் வந்து விட்டேன்' என்று சொல்லிக் கொண்டே தலையை சொறிந்தேன்.

ஓ 'அதுவா' உன்னைக் கண்ட பெருமகிழ்ச்சியில் அதனால் ஏற்பட்ட எழுச்சியில் நான் என்னையே மறந்து விட்டேன். உன்னைப்போன்ற உடன் பிறப்புக்கள் தானே தளபதியாம் என்னைக் காப்பாற்ற வாரி வழங்கிய நிதி. அதாவது விசாரணை கமிஷன் செலவு நிதி. இதோ, பார் பட்டியல் என்று கணக்கு புஸ்தகத்தை ஒரு கையால் காட்டினார். மறுகையால் பக்கத்தில மேசை மீது இருந்த உண்டியலை எடுத்து என் முன் நீட்டினார்.

பையை துழாவினேன்! 2 காசு கிடைந்தது. எடுத்தேன்.

'லபக்' என்று என் கையில் இருந்து காசைப் பிடுங்கிக் கொண்டார் கோப்பெருஞ் சோழன், அவர் கண்களில் நீர் தாரை தாரையாக வடிந்தது. காசை எடுத்து கண்களில் ஒற்றிக் கொண்டார். பயபக்தியோடு உண்டியலில் போட்டார். பேனாவை எடுத்தார்; கணக்கு நோட்டை பிரித்தார்.

அன்னவாசல் ஆறுமுகம் விசாரணை கமிஷன் செலவுக்கு தந்த நிதி 2000 ரூபாய் என்று எழுதிக் கொண்டார்.

இப்போது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

விசாரணைக் கமிஷன் செலவு நிதிக்கு ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் சேர்ந்த சூட்சமம் எனக்கும் விளங்கியது.

அவர் இன்னமும் தலைகுனிந்து கொண்டு ஏதோ எழுதிக் கொண்டுதான் இருந்தார்.

கலைஞரின் திறமையே திறமை என்று மெச்சிக் கொண்டு வீட்டைவிட்டு வெளியேறினேன்.

பின்குறிப்பு: இப்போது ஊர் ஊராக நிதி வசூலிக்க கள்ளச் சாராய சாம்ராஜ்ய தம்பிரான் கிளம்பிவிட்டாராம். ஒன்றுக்கு பின்னால் சைபர்களை கூட்டி கணக்கு எழுத இந்த சுற்றுப் பயணம் மிக வசதியாக இருக்கும் என்று கூறுகிறார்கள்.

ஓட்டல் அதிபர்களிடம்

# பேரம் நடத்தியதாக மதுரை மாநகராட்சி ஊழியர்கள் சஸ்பெண்டு!

மதுரை, ஜூன் 10—நகர ஓட்டல்களில் கலப்பட வழக்கிற்காக எடுக்கும் பண்டங்களின் மாதிரிகளை சோதனைக்கு அனுப்பாமல் ஓட்டல் அதிகாரிகளிடம் பண பேரம் செய்து பணம் வாங்கியதாக மதுரை மாநகராட்சியின் இரு சானிட்டரி இன்ஸ்பெக்டர்கள் சஸ்பெண்டு செய்யப்பட்டுள்ளனர்.

இதற்கான உத்திரவை மாநகராட்சி கமிஷனர் தங்கவேலு பிறப்பித்திருக்கிறார்.

மாநகராட்சியில் உள்ள 30 க்கும் அதிகமான சானிட்டரி இன்ஸ்பெக்டர்கள் கலப்பட வழக்கிற்காக ஓட்டல்களில் இருந்து "சாம்பிள்" எடுத்து மாநகராட்சி அலுவலகத்தில் உள்ள சானிட்டரி இன்ஸ்பெக்டர்களிடம் கொடுப்பார்களாம்.

அதை வாங்கிக் கொண்டு வழக்கைப் பதிவு செய்து மாதிரிகளை ஆராய்ச்சிக் கூடத்துக்கு அனுப்ப வேண்டிய அலுவலக சானிட்டரி இன்ஸ்பெக்டர்கள் அதைச் செய்யாமல் ஓட்டல் அதிபரிடமே போய் இனிமேல் கலப்பட சரக்கு என்று முடிவானால் சிறை தண்டனைதான் கிடைக்கும் என்றும் ரூ. 2000 கொடுங்கள் அதைசோதனைக்கு அனுப்பாமல் நான் பார்த்துகொள்கிறேன் என்றும் கூறி பணம் கேட்பாளாம். வியாபாரிகளும் சிறைக்குப் பயந்து பணத்தை கொடுத்து விடுவார்களாம்.

இன்னும் சில சமயங்களில் சஸ்பெண்ட் ஆன இரு சானிட்டர் இன்ஸ்பெக்டர்களும் மாதிரிக்கு அனுப்பியபண்டம் கலப்படமானதுதான் என்று அராய்ச்சிக் கூடம் நிரூபித்திருந்தாலும் அதை வைத்துக் கொண்டு நடவடிக்கை எடுக்காத வகையில் பார்த்துக் கொண்டு சம்பந்தப்பட்ட வியாபாரிகளிடமே பண பேரம் செய்வார்களாம்.

இதுபோன்ற புகார்களின் பேரில் ராஜசேகரன், நெல்சன் என்ற அந்த இரு சானிட்டரி இன்ஸ்பெக்டர்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்.

## நரசிம்மன் புதல்வி திருமணம்

சென்னை, ஜூன் 10—மார்க்கெட்டிங் அட்வெர்டைசிங் அஸோஸியேட்ஸ் பிரைவேட் லிமிடெட் இயக்குனரும் நவமணி ஸ்தாபகர்களில் ஒருவரும், முன்னாள் தலைவருமான ஆர். நரசிம்மனின் புதல்வி மீராவுக்கும், துணை போலீஸ் சூப்பிரிண்டெண்ட், பி. எம். பத்மநாபனின் புதல்வர் பி. எம். ரங்கராஜனுக்கும் (9-6-76) அன்று திருப்பதிதிருமலையில் கர்நாடக சத்திரம் புதிய கல்யாணமண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது.

★ ★ ★

சென்னை, ஜூன் 10—சென்னை எஸ். வி. சிவலிங்க நாடாரின் மகள் ரத்தினமாலாவுக்கும் எம். எஸ். ஜி. கணேச நாடாரின் மகன் தியாகராஜனுக்கும் 9-6-76 அன்று சென்னையில் திருமணம் நடந்தது.

ஏராளமான பிரமுகர்கள் வந்து மணமக்களை வாழ்த்தினர்.

★ ★ ★

சேலம், ஜூன் 10—சேலம் என். டி. பஸ் சர்வீஸ் எஸ். தாமோதரனின் புதல்வி டாக்டர் டி. கல்பனாவுக்கும் சென்னை பச்சையப்பன் கல்லூரி துணை முதல்வர் டாக்டர் ஆர். சர்வோத்தமனுக்கும் (9-6-76) அன்று சேலம் அழகாபுரம் ரத்தினவேல் திருமண மண்டபத்தில் திருமணம் சிறப்பாகநடந்தது

★ ★ ★

கடலூர், ஜூன் 10—தமிழ்நாடு மின்சார வாரியத்தில் உதவி என்ஜினியராக பதவி வகித்து ஓய்வு பெற்ற சார்வபௌமம் தில்லை ஸ்தானம் எஸ். ராகவாச்சாரியின மகன் ஆர். சீனிவாசராகவனுக்கும் ராஜேந்திரம் எயயுன்னி ஜி. நரசிம்மாச்சாரியார் மகள் கனகவல்லிக்கும் இம்மாதம் 7-ம் தேதி தென்னாற்காடு மாவட்டம் திருபாப்புலியூர் சேர்ந்த திருவாஹீந்திரபுரம் அகோபில மடத்தில் திருமணம் நடைபெற்றது.

நண்பர்கள், உறவினர் நகர பிரமுகர்கள் பலரும் திருமணத்தில் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

## விநாயகர்கோயில் கும்பாபிஷேகம்

திருப்பூர், ஜூன் 10—திருப்பூர் லக்ஷ்மி நகரில் புதியதாக கட்டி உள்ள சித்திவிநாயகர் ஆலய கும்பாபிஷேகமும் தீபாராதனையும் நடைபெற்றது. கூனம்பட்டி மாணிக்க வாசகர்மடாதிபதிநா. சரவண மாணிக்கவாசக சுவாமிகள் சமய சொற்பொழிவு நிகழ்த்தினார். பவானி எம். எல். செங்கோடன், சித்தோடு த. வை. முருகேசன ஆகியோர் பேசினார்கள்.

## நாளைய நிகழ்ச்சிகள்

மயிலை வெள்ளீஸ்வரர் ஆலயம் வைகாசப பெருவிழா; 10-ம் நாள்: நடராஜப் பெருமான் தரிசனம் காலை 8-00 மணி பஞ்சமூர்த்தி விழா காலை 10-00 மணி; திருக்கல்யாணபெருவிழா இரவு 9 மணி.

மயிலை சங்கரமடத்தில்காஞ்சி பெரியவாள் ஜெயந்தியை முன்னிட்டு திருக்கள எஸ். நாகநாதனின் குழுவினர் நாம சங்கீர்த்தனம் நடைபெறும். சங்கர மடத்திலிருந்து சங்கராச்சாரியாரின் திரு உருவப்படம் ஓலையில் வேலைப்பாடமைந்த ரத ஊர்வலம் நான்கு மாடவீதிகளில் வீதிவலம் வரும். இரவு 8 மணி.

அண்ணா தி.மு.க. விவசாயத் தொழிலாளர் சங்கம் தரும் தகவல்

# கோவில் நிலம் அனுபவிக்கும் நிலப்பிரபு: நடவடிக்கை எடுக்க அவசர கோரிக்கை

பண்ருட்டி, ஜூன் 10—பண்ருட்டியை அடுத்த திருவதிகை அதிகவல்லி அக்காத்தி அம்மன் கோவில் நிலத்தை நிலச்சுவான் தார்கள் குத்தகை தாரர்களாக உழவடை செய்துவருவதாகவும், அந்த நிலத்தைக் கைப் பற்றி நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்களுக்கு வழங்கவேண்டும் என்றும் அண்ணா தி. மு. கழக விவசாயத் தொழிலாளர் சங்கம் கோரியிருக்கிறது.

தென் ஆற்காடு மாவட்ட அண்ணா தி. மு. கழக விவசாயத் தொழிலாளர் சங்கம் சார்பாக தட்டாம்பாளையம் டி. கே. கோவிந்தன் அறநிலைய ஆணையாளரின் கவனத்திற்கு இந்தப் பிரச்னையைக் கொண்டு வந்து இருக்கிறார்.

திருவதிகை அக்காத்தி அம்மன் கோவிலுக்கு கரும்பு, வாழை, நெல் பயிரிடக் கூடிய 30 ஏக்கரா நிலமும், பல்லாயிரம் பனை மரங்களும், பலன் கொடுக்கும் நூற்றுக் கணக்கான தென்னை மரங்களும் சொந்தம். காய் கொடுக்கும் 20 இலுப்பை மரங்கள் கொண்ட பத்து ஏக்கரா தோப்பும் சொந்தம்.

பலப்பட்டு கிராமத்தைச் சேர்ந்த ஒரு மிராசுதாரின் குடும்பத்திற்கு நூற்றுக்கணக்கான ஏக்கரா சொந்தம். 30 மின்சார மோட்டார் பம்பு செட்டுகள் ஓடுகின்றன. இவரும் அக்காத்தி அம்மன் கோவில் நிலத்திற்கு ஒரு குத்தகைதார்.

பக்கிரிப் பாளையத்தைச் சேர்ந்த ஒரு இஸ்லாமியமிராசுதாருக்கு 60 ஏக்கரா சொந்தம். 20 பம்பு செட்டுகள் ஓடுகின்றன. இவரும் அக்காத்தி அம்மன் கோவில் நிலத்திற்கு ஒரு குத்தகை விவசாயி.

குத்தகை எவர் பெயரில் இருக்கிறதோ தெரியவில்லை, ஆனால் உண்மையில் உழவடை செய்பவர்கள் இந்த நிலச்சுவான் தார்கள் தான்.

ராசாபாளையத்தைச் சேர்ந்த ஒரு மிராசுதாருக்கு ஏராளமான நிலம் இருக்கிறது. ஏழு எட்டு பம்பு செட்டுகள் ஓடுகின்றன. இவரும் அக்காத்தி அம்மன் கோவில் நிலத்திற்கு ஒரு குத்தகை விவசாயி.

அக்காத்தி அம்மன் கோவில் அறங்காவலர் குழுவில் இருந்த ஒரு தி. மு. கழகப் பிரமுகரும் ஒரு குத்தகை விவசாயி.

கோவில்குளம் 3 ஏக்கரா நிலம் இவருக்கு பட்டாவே போட்டுக் கொடுக்கப்பட்டிருக்கிறதாம். இவர் வீரட்டானேசுவரர் கோவிலுக்குச் சொந்தமான 4 ஏக்கரா நிலத்தையும் பயிரிட்டு வருகிறாராம்.

இந்த நிலங்களை மீட்டு நிலமில்லாத அரிஜன விவசாயத் தொழிலாளர்களுக்குத் தர வேண்டும் என்று அண்ணா தி. மு. கழக விவசாயத் தொழிலாளர் சங்கம் கோரியிருக்கிறது.

## அரசியல் சட்டத் திருத்தம்: ஈ.எம்.எஸ். கருத்து

திருவனந்தபுரம், ஜூன் 10—ஜனநாயக கட்டு திட்டத்துக்கு உட்பட்டே எந்த வித அரசியல் சட்டத் திருத்தமும் அமைய வேண்டும் என்று மார்க்சிஸ்டு தலைவர் ஈ. எம். எஸ். நம்பூதிரிபாடு கருத்தறிவித்தார்.

கேரள மாநில சிவில் உரிமைப் பாதுகாப்புக் கமிட்டி கூட்டம் ஈ. எம். எஸ். தலைமையில் கொச்சியில் நடந்தது.

அப்போது அவர், கீழ்மட்ட நடுத்தர மக்களின் சொத்துரிமையைப் பாதுகாக்கும் வகையில சட்டத் திருத்தம் இருக்க வேண்டும் என்று கூறினார். அதே நேரத்தில் பெரு நிலக்கிழார்கள், இந்திய ஏகபோக முதலாளிகள் ஆகியவர்களின் ஆதிக்கத்தை ஒழிப்பதாகவும் அது அமைய வேண்டும் என்றார் அவர்.

சிறுபான்மை மதத்தினர், தாழ்த்தப்பட்டோர், பின் தங்கிய வகுப்பினர் ஆகியோரது உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்று ஈ. எம். எஸ். கூறினார்.

நீதி நிர்வாகம், சட்ட சபை ஆகியவைகளின் அதிகாரத்தை ஜனநாயக முறைகளுக்கு உட்பட்டு வரையறுக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

## டாக்சி உரிமையாளர் சங்க தேர்தல்

சென்னை, ஜூன் 10—டாக்சி உரிமையாளர் சங்கப் பொது உறுப்பினர் கூட்டத்தில் கீழ்க் கண்டவர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்,

தலைவர்; எஸ் ராமதாஸ்; துணைத் தலைவர்: பி. அப்பளசாமி: செயலாளர்; ஜே. டி. தயாளன். துணைச் செயலாளர், எம். குசேலர், பொருளாளர்; ஐ. ஆறுமுகம், மற்றும் 10 பேர் செயற்குழு உறுப்பினர்கள்.

திருப்பூரில்

## கல்யாண மண்டபம்: மன்றாடியார் பங்கேற்பு

திருப்பூர், ஜூன் 10—திருப்பூர் லட்சுமி நகரில் ரூபாய் 5 லட்சம் செலவில் புதியதாக கட்டி உள்ள குலாலர் கல்யாண மண்டபம் திறப்பு விழா முன்னாள் அமைச்சர் என். எஸ். எஸ். மன்றாடியார் தலைமையில் நடைபெற்றது. கல்யாண மண்டப கட்டிடத்தை பெங்களூர் பி. வி. ராமசந்திரப்பா திறந்துவைத்தார். தேசிய கொடியை டாக்டர் காளிமுத்து ஏற்றி வைத்தார். எம். ராசப்ப உடையார் வரவேற்புரைக்கு பின், பவானி பி. கே. நல்லசாமி திருப்பூர் ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் கே. பழனிசாமி நாயுடு, முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் க. துரைசாமி நகர மன்ற தலைவர், நா. கந்தசாமி, நகர ஸ்தாபன காங்கிரஸ் செயலாளர் கே. எஸ். மணி ஆகியோர் பேசினார்கள். திருப்பூர் குலாலர் வகுப்பில் எஸ். எஸ். எல். சி. வகுப்பில்முதல் மார்க் வாங்கிய மாணவி குமாரி இந்திராணிக்கும் மாணவன் தனபாலுக்கும் கோவை மாவட்ட இளங்கோ மன்றத்தினர் வெள்ளி கோப்பை பரிசு வழங்கினார்கள். நகரமன்ற உறுப்பினர் சி. பொன்னுசாமி, கே. கந்தசாமி நன்றி கூறினார்கள்.

# லாரி கவிழ்ந்ததால் கிழவர் மரணம்: டிரைவர் கைது

சென்னை, ஜூன் 10—ஓடிக்கொண்டிருந்த லாரி ஒன்று திடீரென்று கவிழ்ந்ததால் ஏற்பட்ட விபத்தில் முதியவர் ஒருவர் ஸ்தலத்திலேயே மரணமடைந்தார். இதை தொடர்ந்து அந்த லாரியை ஓட்டிவந்த டிரைவர் கைது செய்யப்பட்டார்

மணலி உரம் சுத்திகரிப்பு ஆலை கிழக்கு நுழைவாயில் அருகில் நடந்த இந்த விபத்து பற்றி கூறப்படுவதாவது:—

அய்யாவு (வயது 60) என்ற முதியவர் திருவள்ளூர் இன்னிசைக்காடு என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். மணல் ஏற்றிச் சென்ற லாரியில் பிரயாணம் செய்தாராம். அந்த லாரி மணலி உர ஆலை, கிழக்கு வாசல் அருகில வந்ததும் திடீரென்று கவிழ்ந்தது. அய்யாவு தூக்கி எறியப்பட்டார். படுகாயமடைந்த அய்யாவு அங்கேயே மரணமடைந்தார். அந்த லாரியை ஓட்டி வந்த டிரைவர் ராஜகோபால் கைது செய்யப்பட்டார்.

மணலி போலீஸ் டிப்டி இன்ஸ்பெக்டர் அச்சுத மேனன், சப் இன்ஸ்பெக்டர் இன்பசேகரன் ஆகியோர் இந்த விபத்து குறித்து விசாரணை செய்து வருகிறார்கள்.

## வேலூரில் 20 அம்ச திட்ட கண்காட்சி

வேலூர், ஜூன் 10—பிரதமரின் 20 அம்ச திட்டத்தை மக்களிடம் பரப்ப வட ஆற்காடு மாவட்டத்தில் நேற்று முதல் 12ம்தேதிவரை பலமுனை விளக்கவிழா நடைபெறுகிறது.

இதன் ஒரு அங்கமாக வேலூர் கோட்டை மைதானத்தில் கண்காட்சி ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மாவட்ட கலெக்டர் மு. பரமசிவம் தலைமையில் செய்தி விளம்பரத்துறை இயக்குனர் என். கிருஷ்ணமூர்த்தி கண்காட்சியை நேற்று மாலை துவக்கி வைத்தார்.

சென்னை வானொலி இயக்குநர் எம். எஸ். கோபால் விழாவைத் துவக்கி வைத்தார்.

நான்கு மாத சாதனை பற்றிய புத்தகத்தை செய்தி விளம்பரத்துறை துணை இயக்குநர் கிருஷ்ணபாரதி வெளியிட்டார்.

இந்த விழாவை ஒட்டி 100க்கும்மேற்பட்ட திரைப்படக் காட்சிகளும், 20க்கும் மேற்பட்ட கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. இந்த தகவல்களை மாவட்ட மக்கள் தொடர்பு அலுவலர் சுந்தரநாதன் தெரிவித்துள்ளார்.



## உங்கள் குரல்

### மருந்தில்லா மருத்துவ மனை

ஐயா, வில்லிவாக்கத்திலுள்ள பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த மருத்துவ மனைக்கு எந்த நோயாளி சென்றாலும், என்ன நோயானாலும் அங்குள்ள டாக்டர் பார்த்து, உடனே ஒருசீட்டை எழுதிக் கையில் கொடுத்து 'கடையில் மருந்து வாங்கிப் போடு' என கூறி அனுப்புகிறார்.

சிறு காயம் என்றால் கூட டிஞ்சர் கிடையாது. அதற்கும் சீட்டு தான்; ஏழை எளிய மக்கள் அரசு இலவச மருத்துவமனை என்று சென்றால் இப்படி பெருத்த ஏமாற்றத்தை உண்டாக்குகிறார்கள்.

ஏழைகளுக்கு மருந்தும் நல்ல சிகிச்சையும் கிடைக்க சம்பந்தப்பட்ட அதிகாரிகள் உடனே தலையிட்டு ஆவன செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
டி. முத்துக்குமார்,
வில்லிவாக்கம்
சென்னை-49

# சோவியத்நாட்டில்வெற்றித் திருமகள் சுற்றுப் பயணம்

# மகத்தான தலைவர் இந்திரா

## பிரஷ்னேவ் புகழாரம்

**மாஸ்கோ, ஜூன் 10—இந்தியாவின் மகத்தான தலைவர் இந்திரா. அவரது தலைமையில் இந்தியாவில் ஸ்திரத்தன்மை ஏற்படு என்று சோவியத் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பிரஷ்னேவ் புகழாரம் சூட்டியுள்ளார்.**

நேற்று மாஸ்கோவில் சோவியத் தலைவர்களுடன் 2-வது நாளாக பிரதமர் இந்திரா பேச்சு வார்த்தை நடத்தினர்.

நேற்றைய பேச்சு வார்த்தைகள் சுமார் 135 நிமிடங்கள் நீடித்தன.

ஆசியாவில் பதட்ட நிலையைத் தணிக்க தகுந்த நடவடிக்கைகளை எடுப்பதற்கு இருநாட்டு தலைவர்களும் உறுதி மேற்கண்டதாக தெரிகிறது.

பேச்சுவார்த்தை மிகுந்த சுமுகமான சூழ்நிலையில் நடந்தது.

### பக்குவ நிலை

இருநாடுகளின் நட்புறவு மேலும்பலப்பட பக்குவமான சூழ்நிலை நிலவுவதாக கருத்து தெரிவிக்கப்பட்டது.

பேச்சுவார்த்தைகளின் போது பிரதமர் இந்திராவுக்கு உதவியாக வெளிவிவகார அமைச்சர் ஒய். பி. சவான், திட்ட அமைச்சர் சங்கர் கோஷ். சோவியத் நாட்டில் இந்திய தூதராக இருக்கும் குஜ்ரால் ஆகியோர் கலந்துகொண்டனர்.

சோவியத் தரப்பில் அந்த நாட்டு கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பிரஷ்னேவ், ஜனாதிபதி போட்கார்னி, பிரதமர் கோசிஜின, சோவியத் வெளி விவகார அமைச்சர் குரோமிகோ ஆகியோர் கலந்துகொண்டனர்

பரவலான விஷயங்கள் பற்றி தமது மதிப்பீட்டை சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் பிரஷ்னேவ்வெளியிட்டார்.

பிரதமர் இந்திராவின் உறுதிமிக்க நடவடிக்கைகள் காரணமாக உள்நாட்டுவெளிநாட்டு பிற்போக்கு சகதிகள் முறியடிக்கப்பட்டன.

இந்திராவின் தலைமையில் இந்தியாவில் ஸ்திரதன்மை ஏற்பட்டிருக்கிறது என்று பிரஷ்னேவ் மகிழ்ச்சியோடு குறிப்பிட்டார்.

### மக்கள் நலன்

மக்கள் நலனுக்காக சமூக பொருளாதார நடவடிககைகளை இந்திய அரசு மேற்கொண்டுள்ளது பாராட்டுக்குரியது என்றார் பிரஷ்னேவ்.

இந்தியாவில் முற்போக்கு சக்திகள் அனைத்தும் ஒன்றுபட்டு பிற்போக்கு சக்துகளை எதிர்த்து தொடர்ந்து போராடும் என்று தாம் நம்புவதாக பிரஷ்னேவ் தெரிவித்தார்.

காலஞ்சென்ற நேருவால் அடிதளமிடப்பட்டு கட்டப்பட்ட இந்திய சோவியத் நட்புறவிற்கு தமது நாடு மிகுந்த முக்கியத்துவம் அளிப்பதாக பிரஷ்னேவ் குறிப்பிட்டார்.

### பொது சொத்து

இந்திய—சோவியத் நட்புறவு இரு நாடுகளுக்கு மிடையேயுள்ள பொதுச் சொத்து. அதை போற்றி பாதுகாக்கவேண்டியது அவசியம் என்று பிரஷ்னேவ் கூறினர்.

இந்திய—சோவியத் நட்புறவு ஒப்பந்தம் இரு நாடுகளுக்குமிடையே வழக்கமான உறவை மேலும் வலுப்படுத்த உதவியது என்றார் பிரஷ்னேவ்.

### புதிய துறை

புதிய துறைகளில் இரு நாடுகளுக்குமிடையே பொருளாதாரஒத்துழைப்பை விரிவுபடுத்த வேண்டும் என்று குறிப்பிட்ட பிரஷ்னேவ், சோவியத் யூனியன் இவ்வாறு ஒத்துழைக்க தயாராக இருப்பதாக அறிவித்தார்.

எந்த நாட்டையும் பயமுறுத்தும் போக்கு சோவியத் நாட்டிற்கு கிடையாது என்றும் அறிவித்தார்.

இந்து மகா கடலில் எல்லா நாட்டு படைத் தளங்களையும் கலைக்கவேண்டும் என்பதே சோவியத் நாட்டின் கொள்கை என்று பிரஷ்னேவ் உறுதியாக கூறினர்.

இலங்கையில் நடைபெறவிருக்கும் கூட்டு சேரா நாடுகளின் மாநாடு முக்கியத்துவம் வாய்ந்தது என்று பிரஷ்னேவ் குறிப்பிட்டார்.

கூட்டு சேரா நாடுகள் ஏகாதிபத்திய காலனி ஆதிக்கத்தை எதிர்க்கும் நாடுகளாகவே சோவியத் யூனியன் கருதுகிறது என்றார் பிரஷ்னேவ்.

## லெனின் சமாதியில் இந்திரா அஞ்சலி

மாஸ்கோ, ஜூன் 10—மாஸ்கோவில் உள்ள லெனின் சமாதிக்குச் சென்று பிரதமர் இந்திரா மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

இந்திராவுடன் மூத்த மகன் ராஜீவ் காந்தியும் இரண்டு மருமகள்களும், இந்தியத் தூதுக்குழுவினர் அனைவரும் சென்றனா.

போரில் மாண்ட ரஷ்ய வீரர்கள் நினைவுச் சின்னத்துக்கும் இந்திரா மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

அங்கு செஞ்சேனைப் படையினர் அளித்த அணிவகுப்பு மரியாதையை அவர் ஏற்றுக்கொண்டார்.

# மதுரை நகரில் நல்லெண்ணெய் லிட்டர் ரூ. 5-80

**மதுரை, ஜூன் 10—தமிழ்நாட்டில் ஊளுந்து நல்லெண்ணை விலையைக் குறைக்க அரசு மொத்த வியாபாரிகளுடன் பேசி விலை நிர்ணயம் செய்துள்ளதல்லவா? அதை உடனடியாக ஏற்று மதுரையில் ஒரு எண்ணை வியாபாரி ஒரு லிட்டர் நல்லெண்ணையை ரூ. 5-80க்கு விற்கத் தொடங்கினர்.**

மதுரை செல்லத்தம்மன் கோயில் தெருவில் ஆஷா ஆயில் ஸ்டோர் என்ற பெயருள்ள கடையை வைத்திருக்கும் வி. ரெங்கநாதன் என்பவர் எந்த சங்கத்தையும் அல்லது நிறுவனத்தையும் கேட்காமல் காலையில் கிலோ ரூ. 6-20-க்கு நல்லெண்ணை விற்க அரசு வேண்டியுள்ளது என்று பத்திரிகை வாயிலாக அறிந்தவுடன் லிட்டர் ரூ. 5-80-க்கு விற்கத் தொடங்கிவிட்டார்.

அதிக விலைக்கு வாங்கியிருந்தேன். இந்த விலைக்கு விற்றால் நஷ்டம் வருமே என்றெல்லாம் சொல்லாமல் தன்னிடம் உள்ள இருப்பை மறைக்கவோ, முடக்கவோ முயலாமல் பகிரங்கமாக லிட்டர் ரூ. 5-80 என்றுவிற்க தொடங்கி விட்டார்.

### கீழமாசி வீதியில்

ஆனால் கீழமாசி வீதியில் உள்ள பல கடைக்காரர்கள் பத்திரிக்கையில் செய்திகளைப் பார்த்த பிறகும் விலைக் குறைப்பு செய்யாமல் கிலோ விலை ரூ. 7-00 என்றே விற்பனை செய்து வருகின்றனர்.

இந்த நிலையில் எண்ணைக் கடை உரிமையாளர் வி. ரெங்கநாதனை நமது நிருபர் பேட்டி கண்டபோது 'அரசு நிர்ணயித்த விலை நியாயமானதே. ஆனால் என்றைக்கும் அரசு நிர்ணயித்த விலை நியாயமானது என்று எந்த வியாபாரியும் ஒத்துக்கொள்வதில்லை. எனவே அவர்கள் பழையபடி அரசு அதிகாரிகளை சந்தித்து இந்த விலை கட்டாது என்றும் கொஞ்சம் விலை ஏற்றத்தான் வேண்டும் என்று சொல்லும் முன்னரே அரசு நிர்ணயித்த விலைக்கு நான் எண்ணையை விற்கத் தொடங்கி விட்டேன்.

தவிர நாட்டில் 20 அம்ச திட்டத்தை அமுல் நடத்துகிறபோது — எல்லோருக்கும் நல்வாழ்வு கிடைக்கும் என்ற உறுதி இருக்கிறபோது—அதற்காக அதிகாரிகளுடன் ஒத்துழைப்பு கொடுப்பதை விட்டு அற்பக் காசுக்காக மரியாதை இழந்து நடந்துகொள்ளக்கூடாது.

இவ்வாறு அந்த எண்ணை வியாபாரி வி. ரெங்கநாதன கூறினர்.

### எண்ணை கடையில் திடீர் சோதனை

தவிர மதுரை கீழமாசி வீதியில் செல்லப் பெருமாள் என்பவர் கடையில் உணவு பிரிவு போலீசார் திடீர் சோதனை நடத்தினர்கள்.

அந்தச் சோதனையில் கணக்கில் காட்டப்படாத 66 லிட்டர் மண்ணெண்ணை இருப்பது கண்டு பிடிக்கப்பட்டு பறிமுதல் செய்யப்பட்டுள்ளது.

## இந்திய—சோவியத் கலாச்சார கழகம்

சென்னை, ஜூன் 10—இந்திய—சோவியத் கலாச்சார கழகம் வில்லிவாக்கம் கிளையில் சார்பில் பிரதமர் இந்திராவின் ரஷிய பயணத்திற்கு பாராட்டு விழா நடந்தது.

டி. ஆர். எஸ். மணி கூட்டத்திற்கு தலைமைவகித்தார். எஸ். வி. சகஸ்ரநாமம், ராதாகிருஷ்ணன், ஜானகிகிருஷ்ணன், வடிவேலு ஆகியோர் பேசினா. விழாவுக்கு வந்திருந்தோரை துரைமுனுசாமி வரவேற்றார்.

# மாடி ரெயில் பெட்டி: ஐ. சி. எப். மகத்தான சாதனை

சென்னை, ஜூன் 10—2 அடுக்கு மாடி ரெயில் பெட்டி ஒன்றை ஆசியாவிலேயே முதன் முதலாக சென்னை ரெயில் பெட்டி தொழிற்சாலை (ஐ சி. எப்.) தயாரித்துள்ளது.

வடிவமைப்பு மற்றும் தரம் ஆராய்ச்சி நிறுவனத்தின் சோதனைக்குப் பிறகுஇந்தப்பெட்டி குறைந்த தூர பிரயாணத்துக்கு விடப்படும். பரீட்சார்த்தமாக தயாரிக்கப்பட்டிருக்கும் இந்த 2 அடுக்கு மாடி ரெயில் பெட்டிக்கான செலவு சுமார் 8 லட்சம் ரூபாய் ஆகும்.

இப்போது உபயோகத்திலிருக்கும் 2-வது வகுப்பு ரெயில்பெட்டி ஒவ்வொன்றிற்கும் ஆகும் செலவு சுமார் ரூ. 4½ லட்சம் ஆகும். இது 90 பிரயாணிகள்தான் உட்கார்ந்து செல்வதற்கான வசதியுடன் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த 2 அடுக்கு மாடி ரெயில் பெட்டியில் மொத்தம் 148 பிரயாணிகள் வசதியுடன் பிரயாணம் செய்யலாம்.

இப்போது தயாரிக்கப்பட்டிருக்கும் இந்த மாடி ரெயில் பெட்டி மத்திய ரெயில்வே நிர்வாகத்தின் பொறுப்பில் டெல்லி—ஆக்ரா இடையே விடப்படும்.

வரும் ஜூலை மாதவாக்கில் இந்த ரெயில் பெட்டி தன் பிரயாணத்தை தொடங்கும்.

475 ரெயில் பெட்டிகள், பர்மா, தாய்வான், தாய்லாந்து பிலிப்பைன்ஸ் முதலிய ஆசிய நாடுகளுக்கும், சாம்பியா தான்ஜானியா ஆகிய ஆப்ரிக்க நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கிறது. ஏற்றுமதி செய்யப்பட்ட ரெயில் பெட்டிகளின் மதிப்பு ரூ. 10 கோடியே 9 லட்சம் ஆகும்.

இதுதவிர மேற்கொண்டு 16ப ரெயில் பெட்டிகள், 32 பிரேக்வான்கள், 10 குளிர் சாதன பெட்டிகள் நைசீரியாவுக்கும் 36 ரெயில் பெட்டிகள் கென்யாவுக்கும்ஏற்றுமதி செய்யப்படவிருக்கின்றன.

ரெயில் பெட்டிகள் தவிர கல்கத்தா டிராம்வேஸ் நிறுவனத்துக்கு 200 டிராம் வண்டிகளையும் ஐ.சி.எப். தயாரித்து தருகிறது.

இந்த தகவல்களை நேற்று நடைபெற்ற நிருபர்கள் கூட்டத்தில் ஐ.சி.எப் ஜெனரல் மானேஜர் ஜே. மாத்தன் தெரிவித்தார். தொழிற்சாலையிலிருந்து வெள்ளோட்டமாக விடப்பட்ட இந்த புதிய ரெயில் பெட்டியில் நிருபர்கள் மற்றும் அதிகாரிகள் பிரயாணம் செய்தனர்.

ஐ. சி. எப். பிரதம மெக்கானிக்கல் என்ஜினீயர் பி. வி. ராமமூர்த்தி, பொருளாதார ஆலோசகர் மற்றும் தலைமை அக்கவுண்ட்ஸ் ஆபீசர் எம். பி. ஜகன்னாதன், என். வி. சுப்ரமண்யம் மற்றும் அதிகாரிகள் தொழிற்சாலை பற்றி விளக்கினர்.

## 16-ம் தேதி சுகாதியா பதவி ஏற்கிறார்

ஐதராபாத், ஜூன் 10—தமிழ்நாட்டுக்குப் புதிய கவர்னராக நியமக்கப்பட்டிருக்கும் மோகன்லால் சுகாதியா 16-ம் தேதி புதன் கிழமையன்று சென்னையில் பதவி ஏற்பார்.

15-ம் தேதி ஐதராபாத்திலிருந்து புறப்பட்டு 16ம்தேதி சுகாதியா சென்னை வந்து சேருவார். அன்று பிற்பகலில் அவர் பதவி ஏற்பார் என்று தெரிகிறது.

15ம் தேதி காலையில் கவர்னர் ஷா சென்னையை விட்டுப் புறப்பட்டுச் செல்வார் என்று தெரிகிறது.

ஆந்திராவில் புதிய கவர்னராக நியமிக்கபபட்டிருக்கும் ஆர். டி. பண்டாரேயும் அடுத்த புதன்கிழமை ஐதராபாத்தில் பதவி ஏற்பார் என்று தெரிகிறது.

## சௌந்தராம்பிகை அந்தாதி

திருப்பெரும்புதூர், ஜூன் 10. திருப்பெரும்புதூர் வட்டத்தைச் சேர்ந்த கோவூரில் உள்ள சுந்தரேஸ்வர சுவாமி ஆலயத்தில் சௌந்தராம்பிகை அந்தாதி அரங்கேற்று விழா நடந்தது.

# பஸ் பயணம்: மாணவர்களுக்கு மேலும் சலுகை

**சென்னை, ஜூன் 10—கல்வி நிலையம் செல்லும் மாணவர்களுக்கு இந்த ஆண்டுமேலும் பஸ் கட்டணச் சலுகை அளிக்கப்படுகிறது.**

சென்ற ஆண்டு மாணவர்களுக்கு பாதிக் கட்டணத்தில் கூப்பன்கள் வழங்கப்பட்டு வந்தன. 60 கூப்பன்களாகவோ 30 கூப்பன்களாகவோ வாங்க மாணவர்கள் அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

இந்த முறையில் சில குறைபாடுகள் இருப்பதாகச்சுட்டிக் காட்டப்பட்டது. அதை ஒட்டி இந்த ஆண்டு புதிய முறை அமுல்படுத்தப்படுகிறது.

போக்குவரத்துத் துறை செயலாளர் பசுபதி இது குறித்து நேற்று நிருபர்களிடம் கூறியதாவது:

பள்ளி, கல்லூரி செல்லும் மாணவர்களுக்கு இந்தஆண்டு முதல் கூப்பன்களுக்குப் பதில் அட்டைகள் வழங்கப்படும். இது சீசன் டிக்கெட் அட்டைகள்போல் இருக்கும்.

மாணவர்கள் குடியிருக்கும் இடத்திலிருந்து கல்வி நிலையம் அமைந்திருக்கும் இடம் அட்டையில் குறிப்பிடப்பட்டிருக்கும். கட்டணமும் அதில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

இதற்கு முன்பு வரை 60 பயணங்களுக்கு பாதிக் கட்டணம் வசூலிக்கப்பட்டு வந்தது. இனிமேல் 55 பயணங்களுக்குத்தான் பாதிக கட்டணம் வசூலிக்கப்படும். ஆனால் 60 பயணங்களை மேற்கொள்ளலாம். இதனால் மாணவர்களின் பஸ் கட்டண செலவு மேலும் குறைய வாய்ப்பு உள்ளது.

ஒவ்வொரு மாதமும் 16-ம் தேதியிலிருந்து அடுத்த மாதம் 15-ம் தேதிவரை செல்லுபடியாகக் கூடியவகையில் அட்டைகள் வழங்கப்படும். ஆனால் ஒவ்வொரு மாதமும் 10 ம் தேதிக்குள் இந்த கார்டுகளை வாங்க வேண்டும்.

இந்த மாதம் மட்டும் 12-ம் தேதி முதல் கார்டுகளை வாங்கலாம். நாளை 11-ம் தேதி முதல் இதற்கான விண்ணப்பங்கள் விநியோகிக்கப்படும்.

### கல்லூரியில் அட்டை விற்பனை

மாணவிகளுக்கு வசதியாக பெண்கள் கல்லூரி பகுதியிலேயே அதிகாரிகள் சென்று பயண அட்டைகளை விற்பது குறித்து யோசித்து வருகிறோம். மாணவிகளும் பெற்றோர்களும் இதைப் பயன்படுத்திக கொண்டால் குறிப்பிட்ட ஒரு தினத்தில் கல்லூரிகளுக்குச் சென்று அட்டைகள விநியோகிக்கப்படும் என்று பசுபதி தெரிவித்தார்.

சென்னை நகரில் கீழ்க்கண்ட இடங்களில் 12ம் தேதி முதல் கட்டணச் சலுகை அட்டைகள் விற்கப்படும்:

1. பாரிமுனையில் உள்ள பழைய பஸ்நிலையம்.
2. காந்திநகர் பஸ் ஸ்டாண்ட்.
3. அம்பத்தூர் பஸ்டிப்போ
4. அண்ணாநகர் பஸ் ஸ்டாண்ட்.
5. அயனாவரம் பஸ் ஸ்டாண்ட்.
6. கருணாநிதிநகர் பஸ் ஸ்டாண்ட்.
7. மாதவரம் பஸ் டெப்போ.
8. மந்தைவெளி பஸ் டெப்போ.
9. தி.நகர் பஸ் நிலையம்.
10. திருவொற்றியூர் பஸ் டெப்போ.
11. தண்டையார்பேட்டை பஸ் டெப்போ.
12. வடபழனி பஸ் டெப்போ.

மேற்கண்ட இடங்களில் வார நாட்களில் காலை 7 மணி முதல் 9 மணிவரையிலும் மாலை 3 மணியிலிருந்து இரவு 8-30 மணி அளவிலும், பஸ் பயண அட்டைகள் விற்கப்படும்.

விடுமுறை நாட்களில் காலை 8-30 மணி முதல் இரவு 7-30 மணிவரையில் அட்டைகள் விற்கப்படும்.

# மிலிடரி ஓட்டல்களில் பண்டம்விலை குறைப்பு: அரசு அறிவிப்பு

**சென்னை, ஜூன் 10—மிலிடரி ஓட்டல்களிலும் இட்லி, தோசை முதலிய உணவுப் பண்டங்கள், அரசு நிர்ணயித்த (எடை அளவுடன்) விலையில் விற்கப்பட வேண்டும் என்று அரசு அறிவித்திருக்கிறது.**

அரசாங்கச் சட்டப்படி ஒவ்வொரு ஓட்டல சொந்தக்காரரும் அவர்கள் விற்ற உணவுப்பண்டங்களின் பெயர் எடை, தேதி, விலை ஆகியவை குறிப்பிட்ட பில்களின் டூப்ளிகேட்டை வைத்திருக்க வேண்டும். ஓட்டலை சோதனையிட விரும்பும் அதிகாரிகள் கேட்கும்போது கொடுப்பதற்காக தயாராக இருக்க வேண்டும். சாப்பிட்டவர்களுக்கு ஒரிஜனல் பில்லைக் கொடுக்கவேண்டும். ஒரிஜினல் பில்களை கவுண்டரில் வாங்கிக்கொள்ளாமல் சாப்பிட்டவர்களுக்கு கொடுத்து விடவேண்டும்.

இதுபற்றி அரசாங்க அதிகாரி ஒருவர் கூறியதாவது:

மிலிடரி ஓட்டல்களில் விற்கப்படும் இட்லி, சாதாரண தோசை, பூரிக் கிழங்கு, முதலிய உணவுப் பண்டங்களும், டீ, காபி ஆகியவைகளும் விலை நிர்ணய சட்டப்படி விற்கப்பட வேண்டும். விலை நிர்ணய சட்டத்திற்குப் பிறகு ஓட்டல்களில் பரிமாறபடும், உணவுப பண்டங்களின் தரம் குறைந்து விட்டது என்று புகார்கள் வந்துள்ளன. சட்டத்திற்கு முன் விற்கப்பட்ட உணவுப் பண்டங்களின் தரம்போலவே இப்போதும் இருக்க வேண்டும். தரக்குறைவு கண்டு பிடிக்கப்பட்டால் சட்டப்படி கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

பொது மக்களின் நலன் கருதி ஓட்டல்களில் உணவுப் பண்டங்களின் பட்டியலை தமிழில் எழுதி வைத்திருக்க வேண்டும்.

இவ்வாறு அந்த அதிகாரி கூறினர்.

## தென்னார்க்காடு மாவட்ட காங்கிரஸ் கமிட்டி

கடலூர், ஜூன் 10—தென்னாற்காடு மாவட்ட காங்கிரஸ் தலைவராக ஈ. எம். சுப்பிரமணிய ரெட்டியார் பொறுப்பேற்றுள்ளார்.

துணைத் தலைவர்களாக எஸ். எல். கிருஷ்ணமூர்த்தி துரைமுனுசாமி, சிவசுப்பிரமணியம், பொருளாளராக பி. விநாயகம், செயலாளர்களாக டி. ஆர். தாதாச்சாரி வி. எம். ஜெயராமன், கே. எம். தங்கமணி. வி. கணணன் எஸ். ராமசாமி, ஜி. செல்லப்பன் ஆகியோர் பொறுப்பு ஏற்றனர்.

செயற்குழு உறுப்பினர்களாக 50 பேரும் விசேஷ அழைப்பாளர்களாக 29 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## பஸ்-மோட்டார் சைக்கிள் பயங்கர மோதல்

சென்னை, ஜூன் 10—பல்லவன் பஸ் ஒன்று மோட்டார் சைக்கிளுடன் மோதியதால் ஏற்பட்ட விபத்தில் இருவருக்கு பலத்த காயங்கள் ஏற்பட்டன.

இந்த கோரவிபத்து நேற்று மாலை சென்னையில் நடந்தது.

பல்லவன் பஸ் ஒன்று பெரம்பூரிலிருந்து திரு. வி.க. நகர் சென்றுகொண்டிருந்தது. தங்கசாலை மணிகூண்டு அருகில் வந்துகொண்டிருந்தபோது பாதையின் நடுவே ஐஸ் வண்டிக்காரர் ஒருவர் ஏதோ கட்டை ஒன்றை பாதையை கவனிக்காமல் அவசரமாக எடுக்க முனைந்தார் என்று கூறப்படுகிறது. பாதையில் தடை ஏற்படவே பல்லவன் பஸ்சை சிறிது வலப்புறமாக டிரைவர் ஓட்டி நிறுத்த முயன்றார். அப்பொழுது எதிரே வேகமாக வந்த மோட்டார் சைக்கிளோடு பஸ் மோதியது.

மோட்டாரை ஓட்டிவந்தவருக்கு காலில் பலத்தகாயம் ஏற்பட்டது. மோட்டார் சைக்கிளின் பின்னல் உட்கார்ந்துகொண்டுவந்த மற்றொருவர் தூக்கி எறியப்பட்டு மூர்ச்சையடைந்தார். பல்லவன் பஸ் போக்குவரத்து டிரைவரும் திடீரென ஏற்பட்ட இந்த விபத்தால் தூக்கி எறியப்பட்டார். அவருக்கு காயம் ஏதும் ஏற்படவில்லை என்று தெரிகிறது.

கறிம்பீடி தொழிற்சாலைக்கு எதிரே சரியாக 5-45 மணிக்கு இந்த விபத்து ஏற்பட்டதாக தெரிகிறது. காயம் அடைந்த இருவரும்ஸ்டான்லிமருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர்.

'அக்கா' படத்தில் ஜெய் கணேஷ், கே. ஆர். விஜயா.

# மேயர் மீனாட்சி

(விமர்சனம்)

குப்பை கூட்டும் சாதாரண வேலைக்காரியாக இருந்த மீனாட்சி, சமுதாயத்திலுள்ள குற்றம், குறைகளை குப்பையாக ஒதுக்கித்தள்ள சூழ்நிலையை உதவியாகக் கொண்டு மேயர் மீனாட்சியாகிருள்!

எத்தனையோ எதிர்ப்புகள் அடுக்கடுக்காக சோதனைகள்! அத்தனையையும் அவள் நெஞ்சுரத்தோடு தாங்கிக் கொள்கிருள். ஒதுக்க வேண்டிய, குப்பை கூளங்களை ஒதுக்கித் தள்ளுகிருள். இது தான் மேயர் மீனாட்சி கதை!

## வசனம்

சென்னை நகர 'செந்தமிழை' வைத்து படம் முழுதும் மதுரை திருமாறன் உரையாடல்களாக விளாசித்தள்ளி விட்டார். காரம்—மணம்—குணம் நிறைந்த உரையாடல்கள்!

## ஜெய்சங்கர், விஜயா நடிப்பு

வாளியையும் அதில்கூட்டுக் கோலையும் சுமந்து கொண்டு கே. ஆர். விஜயா சென்னை நகர பாஷையைப் பேசுவது படா அளகா கீது! அப்பாவித்தனமாக இருப்பதும், உண்மை புரிந்ததும் சூருவளிபோல் சொற்களைக் கொட்டி, கடுங்கோபத்தைக் கண்களிலும், முகத்திலும் காட்டுவதும் காதலித்தவன் தன்னைப் புரிந்து கொள்ளவில்லை என்பதை எண்ணி வருந்துவதும் கே. ஆர். விஜயா நடிப்பின் முத்திரைகள்.

ஜெய்சங்கர் சோடா புட்டி, சைக்கிள் செயின் சகிதம் வந்து மனிதர் என்னபாடு படுத்துகிருர். காதலிக்கு கட்டியம் கூற மறுப்பதும், கடைசியில் முக மலர்ச்சியோடு ஓடோடிவந்து கட்டியம் கூறுவதும் நெஞ்சைத் தொடும் காட்சி!

வி.கே. ராமசாமி பொருத்தமாக நடிக்கிருர். சோ. தேங்காய் சீனிவாசன், சுருளி ராஜன், மனேரமா ஆகியோர்— ஒரு தபா வா ரெண்டு தபாவா, பலதெபா சிரிக்க வைக்கிருர்கள்!

டி. கே. பகவதி, எம்.என். ராஜம், மனேகர், வி. எஸ். ராகவன், கண்ணன், உடையப்பா ஆகியோர் குறையின்றி நடித்துள்ளனர். ஊமைப் பெண்ணாக வரும் பேபி ரோகிணி சிறப்பாக நடித்திருக்கிருள்.

விஜயகுமார், ஸ்ரீபிரியா காதலித்து பாடி ஆட, ஒட நிறைய வாய்ப்பு! அதனை நிறைவேற்றி வைத்திருக்கிருர்கள்.

சுகிசுப்பிரமணியம் கதைக்கு திரைக்கதை வசனம் எழுதியுள்ளார் மதுரை திருமாறன். நாட்டுக்குத் தேவையான நல்ல பல கருத்துக்களை எளிய தமிழில், நகைச்சுவை கலந்து உரையாடல்களாக எழுதியுள்ளார்.

"எவளோ ஒரு பெண்ணும் அவள் நாணியில்லையாம்" என்ற கண்ணதாசன் பாடல் விஸ்வநாதன் இசையமைப்பில் இனிமையாக உள்ளது.

"பேமானி, கசமாலம்" போன்ற சில வார்த்தைகள் இடம் பெருமல் டைரக்டர் தவிர்த்திருக்கலாம்.

ஒளிப்பதிவு சிறப்பாக உள்ளது.

மொத்தத்தில்— பொழுது போக்கு அம்சங்கள் உள்ள படம்.

—நாகைதருமன்

# சுஜாதா நடிக்கும் முதல் வண்ணப்படம்

கிர்ஞர் பிலிம்சார் தங்களின் முதல் தயாரிப்பாக 'லலிதா' என்ற வண்ணப் படத்தை தயாரிக்கிருர்கள். இப்படத்தில் ஜெமினி கணேசன் ஜோடியாக சுஜாதா முதல் முறையாக இணைந்து நடிக்கிருர். சுஜாதா முதல் முறையாக வண்ணத்தில் தோன்றுவதும் இப்படத்தில் தான்.

இப்படம் வங்காளத்தில் தயாரிக்கப்பட்டு 52 வாரங்களும், இந்தியில் 42 வெற்றி வாரங்களும், தெலுங்கில் வெள்ளிவிழாவையும் கண்டது. வங்காள நாயகிசுசித்ரா சென்னுக்கு, உலகத்திலேயே சிறந்த நடிகை பட்டத்தையும் இந்தியில் நடித்த ஜெயபாதுரிக்கும், தெலுங்கில நடித்த பானுமதிக்கும், சிறந்த நடிகை பட்டத்தையும் பெற்றுத் தந்த வலுவான கதை அமைப்பைக் கொண்டது. பணக்கார குடும்பத்தைச் சேர்ந்த கல்லூரி மாணவி லலிதாவுக்கும் கல்லூரி பேராசிரியர் சங்கருக்கும காதல் மலர்ந்து திருமணம் செய்து கொள்கிருர்கள் நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த சங்கரும், பணக்காரப் பெண் லலிதாவும் இணைந்து வாழ்ந்தாலும் லலிதாவின் தாயாரால் அவமானப்படுத்தப்படுகிருன் சங்கர். இதனல் அந்த காதல் தம்பதிகளின் வாழ்வில் சோதனைகளும் வேதனைகளும் ஏற்படுகிறது.

லலிதாவாக சுஜாதாவும், சங்கராக ஜெமினி கணேசனும் லலிதாவின் தம்பியாக கமலஹாசனும், லலிதாவின் பெற்ரோர்களாக கல்கத்தா விஸ்வநாதனும் — சுகுமாரியும் நடிக்கின்றனர். மற்றும் தேங்காய் சீனிவாசன், விஜயன், சுமித்திரா, பண்டரிபாய், புஷ்பா என். கோபால் ஆகியோரும் நடிக்கின்றனர்.

தயாரிப்பாளா பொறுப்போடு, திரைக்கதை-வசனம் -டைரக்ஷன் ஆகிய பொறுப்புகளை வலம்புரி சோமநாதன் ஏற்றுள்ளார். பாலகிருஷ்ணன் ஒளிப்பதிவைக் கவனிக்கிருர். கவிஞர் கண்ணதாசன் பாடல்களுக்கு எம். எஸ். விஸ்வநாதன் இசை அமைக்கிருர். ஆகஸ்ட் முதல் வாரத்தில் திரைக்கு வர இருக்கிறது.



# உழைக்கும் கரங்கள்

விமர்சனம்

நல்லவர்கள் என்று நம்பி அந்த இல்லத்தில் அவன் பணி புரிகிருன். நல்லவர்களாக நடிப்பவர்கள்தான் அவர்கள் என்பது காலம் செல்லச் செல்ல அவனுக்குப் புரிகிறது. ஊர் மக்கள் பணத்தில் வாழ்பவன் அந்தக் குடும்பத் தலைவன் என்பதைக் கண்கூடாகக் கண்டு முதலில் எச்சரிக்கிருன். இவனை ஒழித்துக் கட்டுவது எப்படி என்று அவர்கள் சிந்திக்கின்றனர். அதற்கு ஏற்ற காலம் வருகிறது.

மோக விகாரத்தோடு தன்னை நெருங்கும் விதவைப் பெண்ணை அவன் விலககுகிருன். அவன்தான் மோகத்தோடு நெருங்கினன் என்று பழி சுமத்தப்படுகிறது. பாவம் ஒரு இடம் பழி ஒரு இடம் என்பது எவ்வளவு பெரிய உண்மை! அதிலும் பாவம் செய்யும் பாதகர்களே நல்லவர்கள் மீது இல்லாத பழியை சுமத்துவது எவ்வளவு கொடுமை! அவனை வீட்டைவிட்டு விரட்டியதுடன் மட்டுமின்றி, அடித்து நொறுக்கி வீதியில் உருட்டி விடுகின்றனர். வீதியில்கிடந்த அவனை நடனமாடும் பெண் ஒருத்தி காபபாற்றுகிருள். அவள் இதயம் அவனை நாடுகிறது. அவன் மனமோ இன்னொருத்தியை தன்னோடு இணைத்துக் கொள்கிறதுதான் காதலித்தவளை அழைத்து வந்து தன்னைக்காதலிக்கின்றவளிடம் அவன் அறிமுகப் படுத்துகிருன்... 'உழைக்கும் கரங்கள்' கதை இவ்வாறு சுவையாகத் துவங்கிதொடர்கிறது.

## மனேகர வசனம்

வசனம் மிகவும் துடிப்பாக கருத்தாழத்துடன் அமைத்துள்ளது நாஞ்சில் மனேகரன் உணர்ச்சியோட்டத்துடன், அழகு தமிழில் அருமையாக எழுதியுள்ளார்.

விதவையான தான் கருவுற்றிருக்கிறேன் என்பதைக் கூற— "இடிவிழுந்த மரத்தில் கனி ஒன்று பழுத்திருக்கிறது" என்று பத்மினி சொல்வதை உதாரணமாகக் கூறலாம்.

## எம். ஜி. ஆர். நடிப்பு

"இப்படியே இருந்தபல் எப்படி? நீங்கள் மாற வேண்டும்" என்று கூறும் பவானியிடம் "ஹூ..,ம்... மாறுகிறேன் ,, மாற்றுகிறேன்" என்று எம். ஜி. ஆர். கூறும் இடத்தில் முகபாவம் அருமை!

கொடுமையைக் கண்டு குமுறுவதும், தாயன்பில் உருகி நிற்பதும் 'அவருக்கு இயற்கையாகவே வரக்கூடியது. ஆகையால் சிறப்பாக உள்ளது. துடுக்குப் பெண் லதாவிடம் மோதுவதும், குறும்பாகப் பேசுவதும் ரசிக்கத் தக்க காட்சிகள்.

இந்தப் படத்தில் இதுவரை தமிழ்த் திரைப்பட வரலாற்றிலேயே இதுபோல் வந்ததில்லை என்று கூறத்தக்கவகையில் எம். ஜி. ஆர், இரு சாதனைகளைப் புரிந்திருக்கிருர் ஒன்று மடுவு மான் கொம்பு) சண்டை! அவர் செய்கிற சலாவரிசை பாவல், சண்டை அற்புதம் - அருமை - பரமாதம்! தமிழர்களின் வீர விளையாட்டுகள பட்டுப் போகாமல் பரம்பரை பரம்பரையாக எப்படியோ எங்கோ இருந்து வருகின்றன. அவைகளை முறையோடு, அழகாக படங்களில் இடம்பெறச் செய்து பாதுகாக்கும் அவரது முயற்சி பாராட்டுதற்குரியது.

இன்னொன்று சிவத்தாண்டவம்! பொருத்தமான ஒரு கட்டத்தில் சிவத்தாண்டவத்தை வைத்து வெகு அழகாக எம். ஜி. ஆர். ஆடுகிருர். காண்பவர் கண்கள் இமைக்க மறக்கின்றன!

குறும்புக்காரப் பெண்ணாக லதா நன்கு நடித்திருக்கிருர். புதுமுகம் பவானி அழகாக நடனமாடி படத்தில் அறிமுகமாகிருர்—நடிப்பிலும் குறை யில்லை!

சிறையிலிருந்து தப்பி வந்த கைதிகளாக நாகேஷும், தேங்காய் சீனிவாசனும் அலர்கள் செய்யும் ரகளை குலுங்கக் குலுங்க சிரிக்க வைக்கும்.

தங்கவேலு கிராமத்து சேர்மன்! நமுட்டுச் சிரிப்பு, பேச்சு எல்லாம் வெகு பொருத்தமாக உள்ளது. பண்டரிபாய் அமைதியாக நடித்துள்ளார்.

கண்ணனுக்கு நல்ல வாய்ப்பு! கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நன்கு நடித்திருக்கிருர்.

குமாரி பத்மினி விதவை வேடத்தில் மனதில் இளமை நினைவுகள் பொங்குவதையும், ஏக்கத்தையும் அழகாக தன் நடிப்பின் மூலம் வெளிப்படுத்துகிருர். கவர்ச்சியாகத் தோன்றியுள்ளார்.

வி. எஸ். ராகவன், வி. கோபாலகிருஷ்ணன், சி. கே. சரஸ்வதி ஆகியோர் நடித்துள்ளனர்.

## முத்துலிங்கம் பாடல்

கவிஞர் முத்துலிங்கம் எழுதியுள்ள 'கந்தனுக்கு மாலையிட்டாள் கானகத்து வள்ளி மயில்' கருத்துள்ள காட்சிக்கு ஏற்ற இனிய பாடல்.

'ஆடியபாதங்கள் அம்பலத்தில்', 'உழைக்கும் கரங்களே' இரு பாடல்கள் விஸ்வநாதன் இசையமைப்பில் இனிமையாக ஒலிக்கின்றன.

நடனக்காட்சி, சண்டைக் காட்சியை பி. எஸ். [illegible] அருமையாக ஒளிப்பதிவுசெய்துள்ளார். அரங்கங்கள் கண்ணைக் கவருகின்றன. [illegible] பாராட்டும்படி செய்துள்ளார்.

## டைரக்ஷன்

கிராமிய சூழ்நிலையில், அழகிய கலந்த கதையை அனைவரும் ரசிக்கும்படி விறுவிறுப்பாக சங்கர் இயக்கியுள்ளார். [illegible]

மொத்தத்தில்— வெற்றிக்கரங்கள்!

—நாகை தருமன்

திரை உலகம்

# சுஜாதா தந்தையிடம் சௌகார்ஜானகி கோபம்

தன் மகள் நிர்மலா எப்படியும் அந்த 'தோழியர் மன்ற'த்திற்கு தலைவியாகி விடவேண்டும் என்று ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டிருக்கிருர் ஜெகந்நாதன்.

அப்போது அங்கே வரும் அவரது மனைவி மீனாட்சி "ஒவ்வொரு தகப்பனும் மகளுக்கு காலகாலத்தில் கல்யாணம் நடக்கணும்னு வேண்டிப்பாங்க. மன்றத்துக்கு தலைவி ஆகணும்னு வேண்டிக்கிற நேரமாகுது?" என்று கோபத்துடன் கூறினுள்.

"நான் வேண்டலேங்கிறதனுலெ நம்ம பொண்ணுகக கல்யாணம் நடக்காம போயிடுமா?" என்று கேட்கிருர் ஜெகந்நாதன்.

'நான் என்ன சொல்றது? போன மாதம் கலெக்டர் வீட்டில் சம்பந்தம் பேசினேமே. என்ன சொன்னங்க? உங்க பொண்ணு ஊருக்கு உழைச்சிட்டு மிச்ச நேரத்தில் குடும்பம் நடத்துவாள்போலிருக்கு, அப்பேர்ப்பட்ட பார்ட்டைம் மருகள் எங்களுக்கு வேண்டாம்னு சொல்லலே? இந்த மாதிரியே சுற்றிக்கிட்டு இருந்தா அவள் மன்றத் தலைவியாக ஆகலாம். ஆனல் குடும்பத் தலைவியாக முடியாது. செய்திப் பத்திரிகையில் பேர் வரும். கல்யாணப் பத்திரிகையில் பேர் வராது' என்கிருள்.

இப்படியொரு காட்சி வித்யா மூவிஸ் 'பெரும்புகழும்' படத்திற்காக பிரசாத் ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது

ஜெகன்னதனக தேங்காய் சீனிவாசனும், மீனட்சியாக, சௌகார் ஜானகியும், நிர்மலாவாக சுஜாதாவும் நடிக்க சம்பத் ஒளிப்பதிவு செய்தார். முத்துராமன், கதாநாயகனக நடிக்க, சேகர், சோ, மனேரமா, சத்யப்பிரியா ஆகியோர் நடிக்கும் இப்படத்தின் கதை வசனத்தை தூயவன் எழுதுகிருக.

எம். வேணுகோபால் தயாரிக்கும் இப்படத்தின் டைரக்ஷன் பொறுப்பை வி. சீனிவாசன் ஏற்றுள்ளார்.

# மாலியின் புல்லாங்குழல் கச்சேரி

நவரச சபாவின் ஆதரவில் மியூசிக் அகாடமியில் புல்லாங்குழல் வித்துவான் மாலி, வலங்கிமான் சண்முகசுந்தரம் திருப்பதி முனிராமையா ஸ்பெஷல் தவிலுடன் இசை நிகழ்ச்சி 4 மணி நேரம் நடைபெற்றது. விழா கமிட்டிசார்பில் நவரச சபா செயலாளர் ராமன் எல்லோரையும் வரவேற்றுப்பேசினர். 'இந்து' என். எம். நாராயணன் மாலிக்கு மாலை அணிவித்து, விநாயகர் சிலை பரிசளித்தார். வயலின் வாசித்த ராதா நாராயணனுக்கு டைரக்டர் சுப்பிரமணியம் குமாரத்தி குமாரி பத்மா சுப்ரமண்யம் மாலை அணிவித்து பரிசு வழங்கினர். இரு தவில் வித்வான்களுக்கும் சபா சார்பில் செயலாளர் ராமன் விநாயகர் சிலை வழங்கினர்.

'மழை மேகம்' படத்தில் முத்துராமன், சாரதா.

# புதுமுகம் ஸ்வர்ணவைக் காப்பாற்றுகிருர் முத்துராமன்

கண்ணன் ஒரு டாக்சி டிரைவர். மாதவி என்ற பெண், குளத்தில் விழுந்து தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்யும்போது காப்பாற்றுகிருன் கண்ணன். அவளைப் பற்றி கேட்கிருன். தன் பெயர் மாதவி என்றும் தன் தாயார் தவருன வழியில் செல்லும்படி தன்னைத் தூண்டியதால், உயிரைவிட முடிவு செய்ததாகவும் கூறுகிருள்.

இன்று முதல் உனக்கு நான் பொறுப்பு; உனக்கு ஒரு நல்ல வாழ்க்கையை நான் தருகிறேன். வா முதலில் உன் வீட்டிற்கு செல்வோம், பிறகு மற்றவைகளை பேசிக்கொள்ளலாம்'' என்று கூறிமாதவியை அழைத்துச் செல்கிருன் கண்ணன்.

இக்காட்சி ஆஷாபிரியா புரொடக்ஷனில் தயாரிக்கும் புதிய படத்திற்காக படமாக்கப்பட்டது. கண்ணனக முத்துராமனும், மாதவியாக புதுமுகம் ஸ்வர்ணவும் நடித்தார்கள். ஸ்ரீபிரியா, கதாநாயகியாக நடிக்கும் இப்படத்தில் மனேகர், தேங்காய் சீனிவாசன், மனோரமா ஆகியோர் நடிக்கிருர்கள். சங்கர்-கணேஷ் இசையமைக்க ராஜகோபால் ஒளிப்பதிவு செய்கிருர்.

கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்புகளை ஜி. சனுவாசன் ஏற்றுருக்கிருர். [illegible] இப்படத்தை தயாரிக்கிருர்கள்

# 'அவள் ஒரு காவியம்' பாடல் ஒலிப் பதிவு

ஓ கிருஷ்ண பிரபு
உன்னிடம்குடி கொண்டேன்
இதுதான் எனது
பிருந்தாவனம்"

என்று துவங்கும் கண்ணதாசனின் பாடலை குமார் இசையமைப்பில் பி. சுசீலா பாட ஏ. வி. எம் ஒலிப்பதிவு கூடத்தில 'அவள் ஒரு காவியம்' படத்திற்காக ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

ஜெய் கணேஷ், சுமித்ரா, சாவித்திரி, ஸ்ரீபிரியா அலகள் செல்வகுமார், சுருளிராஜன், மனேரமா ஆகியோர் நடிக்கும் ஆர். ஈ. மகாலிங்கம் தயாரிக்கும் ஸ்ரீசிவாலயா பிலிம்ஸாரின் அவள் ஒரு காவியம் படத்திற்காக மேற்கண்ட பாடல் ஒலிப்பதிவு செய்யப்பட்டது. திரைக்கதை டைரக்ஷன் பொறுப்புகளை துரை ஏற்றுள்ளார்.

# சித்தார்த்தா

(விமர்சனம்)

வாழ்க்கையில் ஆன்மிக அமைதியை நாடி அலைகின்ற சித்தார்த்தா முதலில் புத்தரை சந்தித்து உரையாடுகிருன்—அவன் எதிர்பார்த்த அமைதி அவனுக்குக் கிடைக்கவில்லை. காடு, மேடெல்லாம் அலைந்துதிரிந்த அவன் கடைசியில் கட்டழகி கமலாவை சந்திக்கிருன். இதயத்தில் ஒரு வித புத்துணர்ச்சி எழுகின்றது—எப்படியோ உண்மை அமைதியைக காணஎண்ணிய அவன் ஏந்திழை கமலாவிடம் இன்பம் அனுபவிக்கிருன். காலம் செல்லச் செல்ல காதலும் கசக்கிறது—இன்பம் இழந்து அமைதி குலைந்து மீண்டும் கால்போன வழியில் செல் கிருன்.

படகோட்டி ஒருவனை சந்திக்கிருன். எளிய வாழ்க்கை அவன் இதுவரை [illegible] நிம்மதியைக்கொடுக்கிறது. காதலித்த கமலா மீண்டும் அவன் வாழ்வில் குறுக்கிடுகிருள், என்ருலும் அலைபாயும் மனதை ஒரு நிலைக்குக் கொண்டுவந்து தன்னை சலனமற்ற வாழ்க்கைக்கு ஏற்றவனுக அமையத்துக் கொள்கிருன். சித்தார்த்தா.

ஹெர்மன் ஹேஸ் எழுதிய 'சித்தார்த்தா' நாவலை, கான்ராட் ரூக்ஸ், ஆங்கிலப்படமாகத் தயாரித்தளித்துள்ளார்.

ஆங்கிலப் படம் என்ருலும் இந்திய சூழலில் உருவாககப்பட்டுள்ளது. சசிகபூர் சித்தார்த்தாவாகவும் சிமி—கமலாவாகவும் சிறப்பாக நடித்துள்ளனர்.

இளம் வயதுடையவர்களுக்கு இன்பக் கிளுகிளுப் பூட்டும் நெருக்கமான காதல் காட்சிகள் உள்ளன.

அருமையான ஒளிப்பதிவு பொருத்தமான உரையாடல்கள் படத்தில் உள்ள நல்ல அம்சங்களாகும்.

புத்தர் காலத்தில் நடந்ததாகக் கதை! ஆனல், இக்கால இளம் வயதினருக்கு கண்டு ரசிகக காட்சிகள் பல உண்டு.



Printed by S. V. G. Sowrirajulu, at the M. C. P. P. S. Press, No 4, South Bank Road Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor
K. SOMAMSUNDAR, (SOLAI)